# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

"சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN ): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 5 விளைச்சல் : 44 திருவள்ளுவர் ஆண்டு 2053 சனவரி – 2024

## உள்ளே...









# ஊரக வளர்ச்சித் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Administrative report | – | நிருவாக ஆட்சி அறிக்கை |
| Annuity | – | ஆண்டுத்தொகை |
| Advisory committee | – | அறிவுரைக் குழு |
| Auction purchase | – | தணிக்கை அறிக்கை |
| Auction purchaser | – | ஏலம் எடுப்பவர் |
| Baby show | – | குழந்தைக் காட்சி |
| Bee – keeping | – | தேனீ வளர்ப்பு |
| Bill collector | – | வரித்தண்டலர் |
| Bill register | – | பட்டிப் பதிவேடு |
| Cattle breeding | – | கால்நடை இனப்பெருக்கம் |
| Community hall | – | குமுகாய அரங்கம் |
| Devolution | – | அதிகார மாற்றம் |
| Draft plan | – | வரைவுத் திட்டம் |
| Extension officer | – | விரிவாக்க அலுவலர் |
| Farm products | – | பண்ணை விளைபொருட்கள் |
| Grama sevak | – | ஊர்நல அலுவலர் |
| Gravelled road | - | சரளைச்சாலை |
| Mazdoor | – | பண்ணைப் பணியாள் |
| Model panchayat | – | மாதிரி ஊராட்சி |
| Revised statement | – | திருத்திய அறிக்கை |
| Revolving fund | – | சுழல் நிதி |
| Scavenger | – | தூய்மைப் பணியாளர் |
| Tender register | – | ஒப்பந்தப்புள்ளி பதிவேடு |
| Vehicle tax | – | ஊர்தி வரி |
| Village account | – | ஊர்க் கணக்கு |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2053, சிலை (மார்கழி)

**சனவரி – 2024**





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

# வேர்ச்சொல் காண்பது மொழிக்கு வளர்ச்சி!

மொழி என்பது ஒலிகளின் கட்டமைப்பு. ஒரு குறியீட்டின் ஒலிக்குறிப்புகளே சொற்கள். ஒரு படைப்பிலக்கியத்தை வாசிக்க, எழுத இதுபோன்ற புரிதல் தேவை. வேர்ச்சொல்லை அறியாமல் ஒரு சொல்லைப் பிரிக்கவும் முடியாது; உருவாக்கவும் முடியாது. அருங்கலைச் சொற்களை உருவாக்கும் முன் இதுபோன்ற வேர்ச்சொல் ஆய்வை மேற்கொள்வதே சிறப்பானதாகும்.

ஒருமொழியின் வளத்தை அதன் தனித்தன்மையை அம்மொழியின் வேர்ச்சொற்களை ஆராய்வதன் மூலம் அறிந்துகொள்ளலாம். வேர்ச்சொல் என்பது ஒரு சொல்லில் அடிப்படையாக உள்ள பகுதியாகும். இவை ஒலியன் அடிப்படையில் தொடர்புள்ளனவும், பொருட் தொடர்புகளைக் கொண்டனவுமான பல சொற்கள் காணப்படுகின்றன. இவை அனைத்துக்கும் பொதுவானவையே வேர்ச்சொற்கள் எனப்படும். எடுத்துக்காட்டாக வளை, வளையம், வளையல், வடை, வட்டம், வட்டு, வட்டில், வடம் போன்ற சொற்கள் அனைத்துக்கும் அடிப்படையாக அமைந்திருப்பது வள் என்னும் வேர்ச்சொல்லாகும். வேர்ச்சொற்களுடன் ஒட்டுகள் சேரும்போது பல்வேறு சொற்கள் உருவாகின்றன. பிரிக்க முடியாத அடிப்படைச் சொல்லே வேர்ச்சொல். இதனைப் பகுதி என்றும் கூறுவர். நட – எனும் சொல்லைப் பிரித்தால் ந, ட என எழுத்துகள் ஆகும். வேர்ச்சொல் பொதுவாகக் கட்டளையாகவோ, ஏவலாகவோ அமையும்.

அருஞ்சொற்களை உருவாக்கும் போது அது பிற மொழிச்சொல் எனில் முதலில் அதன் வேர்ச்சொல்லை ஆய்தல் இன்றியமையாததாகும். பின்பு அதற்கான தமிழீடைச் செய்தல் வேண்டும். சான்றாக,

காஃபி என்பதை மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் 'குளம்பி' என்று கூறினார். காஃபி என்பது காஃப் என்ற சொல்லிலிருந்து பிறந்தது. காஃபிக் கொட்டை பார்ப்பதற்குக் மாட்டின் காற்குளம்பு போல இருக்கும். அதனால் காஃப் என்ற சொல்லின் வேரைப் பிடித்த பாவாணர் அதற்குக் 'குளம்பி' என்று தமிழீடு செய்தார். வேர்ச்சொல்லையும், சொல்லுக்குள் உள்ள அதன் பொருளையும், அதன் ஆழம் வரை சென்று பின் அதற்கான சொற்களை உருவாக்குவது கலைச்சொல்லாகும். சான்றாகச் சில சொற்கள்...

- சம்பளம்

  சம்பு + அளம் = சம்பளம் (சம்பு – சம்பா நெல், அளம் – உப்பு)

- கட்டாயம்

  கட்டு +ஆயம் = கட்டாயம் (கட்டு – செலுத்துதல், ஆயம் – வரி)

எவ்வித மறுதலிப்புமின்றிச் செலுத்த வேண்டிய வரி கட்டாயம் என்ற பொருள் பூண்டது.

தமிழ்மொழி மிகுந்த சொல்வளம் கொண்டது. எந்தக் கருத்தையும் தன் வளத்தைக் கொண்டே சொல்லாக்கக் கூடிய ஆற்றல் இம்மொழிக்கு உண்டு. காலந்தோறும் தமிழ்மொழி புதுச்சொற்களை உருவாக்கிக்கொண்டேதான் இருக்கும். வேர்ச்சொல் வளம் நம் தாய்மொழியாம் தமிழ்மொழியில் மிகுதி. வேர்ச்சொல் என்பது சொல்லில் அடிப்படையாக அமைந்துள்ள அதன் பகுதி என்பர்.

இயம்பியது – இயம்பு

அவிழ்ந்தது – அவிழ்

ஓடுகிறான் – ஓடு

உலக முதன்மொழி தமிழ் என்ற வரலாற்று உண்மையின் அடிப்படையில் தம் ஆராய்ச்சியை அமைத்துச் சொற்களை ஆராய்ந்து அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியவர் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள். தொல்காப்பியர் காலத்திற்குப் பின் தமிழன்னை தன்னை நிலைப்படுத்த உதவியவர் இவர். இனச்சொல் காட்டுதல், ஒரு பொருள் குறித்த பலசொல், பொருளின் இனவகைகள், சொற்களின் வேர்மூலத்தைக் காட்டல் எனப் பல்வேறு நெறிமுறைகளால் எம்மொழிச் சொற்களுக்கு இணையாகவும் நம் தாய்மொழிச் சொற்களை ஆக்கிக்கொள்ளும் நனி சிறந்த வேர்ச்சொல் வளமிக்கது நம் மொழி என உலகுக்கு நிறுவியர் தேவநேயப் பாவாணர் அவர்கள். ஒரு சொல்லின் மூலச்சொல் எதுவோ அதுவே அச்சொல்லின் வேர்ச்சொல்லாகும். வேர்ச்சொல் பெரும்பாலும் கட்டளையாகவோ ஏவலாகவோ அமையும்.

சான்றாக, படித்தேன் என்பதன் வேர்ச்சொல்

'படி', வந்தான் என்பதன் வேர்ச்சொல் 'வா', பார்த்தான் என்பதன் வேர்ச்சொல் 'பார்', கேட்டான் என்பதன் வேர்ச்சொல் 'கேள்' என்பதாகும். பொருளின் வேர்ச்சொல்லோடு கூடிய சொற்களைப் பயன்படுத்துவது எப்போதும் ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இருக்கும்.

தமிழ், உலக மொழிகளில் மூத்ததும், மிகத் தொன்மையான காலத்திலேயே செம்மையான மொழியாக வடிவம் பெற்றதும், திராவிட மொழிகளுக்குத் தாயாகவும், ஆரியத்திற்கு மூலமாகவும் விளங்கிய மொழி எனவும் உலகுக்கு உணர்த்தியவர் பாவாணர் அவர்கள். தமிழ்மொழியின் வேர்ச்சொல் வளத்தையும், எளிமையையும் சுட்டிக்காட்டி அதன் வளர்ச்சிக்கான வழிவகைகளைத் தம் படைப்புகளின் மூலம் உலகம் அறிய வகை செய்தார்.

தேவநேயப் பாவாணரின் பங்களிப்புகளில் முதன்மையானது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி. தமிழ்ச்சொற்களுக்குத் தமிழ்ப் பண்பாட்டு வெளியில் இருந்து வேர்ச்சொற்களைக் கண்டறியும் முயற்சி இது. தேவநேயப் பாவாணரின் முதன்மைப் பங்களிப்பு தமிழின் தனித்தன்மையைப் பொது அரங்கில் நிறுவியது. இந்திய மொழிகள் சமற்கிருதம், திராவிடம், என்ற பார்வையைத் தாண்டி இரண்டுக்கும் மாற்றாகத் தமிழை நடுவாகக்கொள்ளும் அணுகுமுறையை உருவாக்கியவர். இது இன்று தமிழாய்வாளர்கள் நடுவே ஒருபிரிவாக அமைகிறது. பாவாணர், தமிழ்ச்சொற்களுக்குத் தமிழ் மரபில் இருந்தே வேர்ச்சொற்களைக் கண்டறிந்து அதனூடாகப் பல்லாயிரம் தமிழ்ச்சொற்களை உருவாக்கினார் என்ற நிலை நம்மை இன்றும் வியக்க வைக்கிறது. பாவாணரின் ஆய்வுநோக்கு தமிழர் மெய்யியலை வகுக்கவும், விளக்கவும் உதவியது.

"எளிதாகப் பேசுமொழி தமிழ் பாப்பா
மூச்சிழுக்கும் வல்லொலியதில் இல்லை பாப்பா
பேசு பாப்பா – தமிழ் பேசு பாப்பா"

பாவாணரின் இவ்வரிகள் நூற்றாண்டைக் கடந்தும் இன்றும் நமக்கு இன்றியமையாததாகின்றன.

தாய்மொழியை நேசிப்போம்; கன்னல்தமிழ் வாசிப்போம் ; மொழிக்கு வளம் சேர்க்கும் சொற்களைத் துறைதோறும் உருவாக்குவோம். நிற்க,

இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

தொல்காப்பியர் தமிழ்ச் சங்கத் தலைவர் புலவர் வெற்றியழகனாரின், "ஆய்த எழுத்து மெய்யா? உயிர்மெய்யா?" எனும் கட்டுரையும், மலேசியத் "தமிழ்நெறிக் கழகத்தின் தேசியத் தலைவர் திரு. இரா. திருமாவளவன் அவர்களின், "சில சொற்களும் தமிழ்த் தொடர்பும்" என்னும் கட்டுரையும், மேனாள் ஆங்கில விரிவுரையாளர் முனைவர் ஆ. அரிமாப் பாமகன் அவர்களின், " பட்டடை" எனும் கட்டுரையும், புதுச்சேரி அரசினர் ஆய்வு நிறுவனத்தைச் சேர்ந்த முனைவர் ப. கொழந்தசாமி அவர்களின், "அவை : போலி ஒப்புருச் சொல்லாக..." எனும் கட்டுரையும், முதுகுளம் பட்டதாரி ஆசிரியர் திரு. அண்டனூர் சுரா அவர்களின், "பொங்கல் காலப் பதங்கள்" எனும் கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்சு அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா.பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

"நன்று தமிழ் வளர்க! தமிழ்
நாட்டினில் எங்கணும் பல்குக! பல்குக!
என்றும் தமிழ் வளர்க – கலை
யாவும்தமிழ்மொழியால்விளைந்தோங்குக"

– பாவேந்தர் பாரதிதாசன்

# சில சொற்களும் தமிழ்த் தொடர்பும்

இரா. திருமாவளவன்
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா



Jersey எனும் இச்சொல் ஆங்கிலத்தில் ஒரு தீவைக் குறிக்கும் சொல்லாகும்.

காசெரியா Caesarea எனத் இத்தீவு குறிக்கப்பட்டுள்ளதாகக் கூறுவர். அங்கியா angia , அக்னா Agna எனும் சொல் மூலத்திலிருந்து இச்சொல் உருவாகியதாகவும் கூறுகிறார்கள். அண்டியம் andium, அண்டியன் andion எனும் சொற்களும் இதன் இலத்தின் வடிவாகக் காட்டப்படுகின்றன . பெரிது, பெரிய, விரிந்த எனும் பொருளை இச்சொற்கள் உணர்த்தும். அஃதாவது பெரிய தீவு என இத்தீவு குறிக்கப்பட்டுள்ளது.

இந்தோ ஐரோப்பிய மொழிகளில் கg, கk ஒலிப்பு ஜj என மாறும். தமிழில் கா வடக்கில் ஹ என்றும் gnya க்ஞா என மாறுவதை ஓர் ஒப்பீடாக இங்குக் காட்டலாம். காண் > காணல் > காணம் = காண்பதால் பெறும் அறிவு எனும் பொருளில் ஞானம் எனும் சொல் வட மொழியில் உருவாகியுள்ளதையும் ஒப்பிட்டறிக.
காணம் தமிழ்; ஞானம் தமிழன்று. அறிவே விளங்குவது.

இங்கு caesarea எனுஞ் சொல் c> k> g > j எனப் படிப்படியாய் jersey என ஆகியிருக்கிறது . எனக்கு இவ்விடத்தில் பெருமைப் பொருளை உணர்த்தும் agna, angia, andion, andium முதலாய சொற்களே கண்களை உறுத்தின.
தமிழில் அகல் > அகலம் ,
அகண் > அகண்டு > அகண்டம் > அண்டம் = விரிந்த வான்
அகல்> அகன்றம்> அகண்டம் = விரிந்த
அகண்டவாய் = விரிந்த வாய்

அ+ கண்டம்= பகுக்கப்படாத விரிந்த பரப்பு என்றும் வரும்.

அகல்>அகர் > அகரம் = விரிந்த மருத நிலத்தூர்

அகரம் = அகன்ற நிலம்

L. ager = field
GK. agros
Skt . ajra
OE. aecer
aecer > ajra
aecer>aecerea>Caesarea
caesarean > [tʃe:sarea] > gaesarean > jaesarea
gersei > gersoi> jersei> jersey
( gym > jim )

தமிழின் அகல் எனும் விரிபொருள் சொல் jersey எனும் சொல்லுக்கு மூலமாக இருப்பதைக் கண்டறிந்தேன். Jersey > பெரிய கால்வாய்த் தீவு. இத்தீவில் உருவாக்கம் பெற்றதால் விளையாட்டுச் சட்டைக்கு jersey எனும் சொல்லை ஆக்கிக் கொண்டனர். பல்வேறு அணிகளின் அடையாளமாக இச்சட்டை இருப்பதால் அணிச்சட்டை என்று பெயர் வைக்கலாம் எனக் கருதுகின்றேன். ஆங்கிலத்தில் jersey எனுஞ் சொல் அச்சட்டைக்கு இம்மியும் பொருந்தாது. ஆனால் நாமும் சேர்ந்துதான் சொல்கிறோம்.. ஏற்றுங்கொண்டோம்.

அணிச்சட்டை = அணிகளுக்கான சட்டை.
Jersey இனி, தமிழில் அணிச்சட்டை என்போம்...

## Microchip – நுண்சிற்பு

சிட்டு எனும் சொல் சிறுமை பொருள் உணர்த்தும் சொல்லாகும்.
இல்> சிறுமை பொருள் வேர்.

இல்> சில்>சிறு
சில்> சில ( சிறிதளவு , கொஞ்சம்)
சில்> சிட்டு > சிறிய பறவை.
சிட்டுக்குருவி.

சில்> சிட்டு> சிட்டான்= சிறிய உருவினன்/ சின்னவன்

சில்> சிட்டு> சிட்டை= சிறிய தாள்/ slip
சில்> சிட்டிகை=> சிறிய விரல் பிடி அளவு.

சில்> சிட்டு> சீட்டு ==> ticket
சில்> சில்லி= சிறு மூக்கு/ மூக்கின் உள் பகுதி.
சில்> சில்+பு ==> சிற்பு>சிற்பம்= சிறிது சிறிதாகச் செதுக்கப் பட்ட சிலை.
சில்> சிற்பு> சிப்பு= சிறிதாகக் கணக்கெடுக்கப் பட்ட முகத்தலளவு. அரிசி சிப்பு என்ன விலை?
சிப்பு = ஓர் அளவீடு.

மேலை இந்தோ ஐரோப்பிய மொழிகளிலும் chip என்பது, சிறிது சிறிதாக வெட்டப்பட்ட, செதுக்கப்பட்ட சிறு துண்டு என்றும், சிறிய பலகை என்றும், வெட்டப்பட்டது என்றும், அதனால் பிளக்கப்பட்டது என்றும், பிரிவு என்றும் பொருள் பெறுவதைக் காணலாம். தமிழின் சிறுமைப் பொருள் தரும் இல் எனும் வேரடியினின்றே இச்சொல்லும் இப்பொருளைப் பெற்றிருக்க வேண்டும்.

From Middle English chip, chippe, from Old English ċipp ("chip; small piece of wood"), from Old English *ċippian ("to cut; hew") – attested in Old English forċippian ("to cut off") –, from Proto–Germanic *kipp– ("to cut; carve; hack; chop"), from Proto–Indo–European *ǵeyb– ("to split; divide; germinate; sprout"). Related to Dutch kip, keep ("notch; nick; score"), Dutch kippen ("to hatch"), German Low German kippen ("to cut; clip; trim; shorten"), German kipfen ("to chop off the tip; snip"), Old Swedish kippa ("to chop"). Compare also chop.
The formally similar Old English ċipp, ċypp, ċyp ("a beam; log; stock; post"), from Proto–Germanic *kippaz ("log; beam"), whence Old Saxon kip ("post"), Old High German kipfa, chipfa ("axle, stave") and Old Norse keppr ("cudgel, club"), ultimately from Latin cippus ("stake; pale; post"), is a different, unrelated word.

இல் எனும் சிறுமைப் பொருள் வேருக்கு உல் எனும் துளைத்தல் பொருள் ஆணி வேரே மூலமானதாகும். துளைக்கப்படும் பொருள் பிளந்து சிறுக்குமாதலால் உல் > இல் > சிறுமைப் பெற்றுள்ளது என்பதே ஏரணமாகும்.

உல் > இல் > சில்
சில்> சில்லு
சில் > சில்லை
சில்> சிற்பு என அமைதல் இயல்பான வேர் விரிவாகும்.

இவ்வடிப்படையில்
சில் > சிற்பு> chips = சிறிய கணினி நுண் பொருள் என சொல்லமைவது இயல்பானதும் ஏரணமானதுமாகும்.

Chip = நுண்சிற்பு
என்பது இக்காலைய பொருள்.

தேயால் ஆன டே ( Day)

உ> உல்>துல்> தெல்>தெய்> தேய்> தீய்> தீ
தொடுதலால் உரசலும் உரசலால் தேய்த்தலும் தேய்த்தலால் தீயும் ஆன கதையை மேற்கண்ட சொல்லாய்வு நிறுவுகின்றது.

பொருள்கள் ஒன்றோன்று பொருதினால்தான் உரசிடல் முடியும். உரசல் தேய்த்தலாகும்.. தேய்க்கத் தேய்க்கச் சூடேறி தீ உருவாகும் என்பது அறிவியல்...
சொல்லறிவியலும் அவ்வியற்கை அறிவியலையே உணர்த்துகின்றது. தேய்த்தலால் தீய் ஆகி, தீ ஒளி தருகின்றமையால் தேய் ஒளிப்பொருளுமானது. தமிழ் ஒளியாம் தேய்... மேலை மொழியில் சுடர்தரும் டேய் Day ஆகியது . ஒளியான Day ஆங்கிலத்தில் பகலையும் சுட்டி நிற்பதை நாம் அறிவோம்.

day (n.)
Old English dg "period during which the sun is above the horizon," also "lifetime, definite time of existence," from Proto–Germanic *dages– "day" (source also of Old Saxon, Middle Dutch, Dutch dag, Old Frisian di, dei, Old High German tag, German Tag, Old Norse dagr, Gothic dags), according to Watkins, from PIE root *agh– "a day." He adds that the Germanic initial d– is "of obscure origin." But Boutkan says it is from PIE root *dhegh– "to burn" (see fever). Not considered to be related to Latin dies (which is from PIE root *dyeu– "to shine").

From Middle English day, from Old English dæġ ("day"), from Proto–Germanic *dagaz ("day"), from Proto–Indo–European *d$^{h}$og$^{wh}$–o–s, from *d$^{h}$eg$^{wh}$– ("to burn"). Cognate with Saterland Frisian Dai ("day"), West Frisian dei ("day"), Dutch dag ("day"), German Low German Dag ("day"), Alemannic German Dai ("day"), German Tag ("day"), Swedish, Norwegian and Danish dag ("day"), Icelandic dagur ("day"). Cognate also with Albanian djeg ("to burn"), Lithuanian degti ("to burn"), Tocharian A tsak–, Russian жечь (žečʹ, "to burn") from *degti, дёготь (djogotʹ, "tar, pitch"), Sanskrit (dāha, "heat"), (dahati, "to burn"), Latin foveō ("to warm, keep warm, incubate"). Latin diēs is a false cognate; it derives from Proto–Indo–European *dyew– ("to shine").

தக தக எனும் தமிழ்த்தொடரில் வரும் தக தேயிலிருந்து தோன்றியதாகலாம். தகதக தங்கத்திற்கு மூலம். தக தக வென மின்னுவது தங்கமாயிற்று. தக> தவ எனவும் மாறும். தீ தகதகவென எரிதலை வழக்கில் நாம் கண்டவர்தாமே... எரிதல் போலும் துன்பத்தைத் தாங்குதலே தவமாயிற்று. தக> தவ> தவம். எரிதல் போல் நீர் விடாய் எடுப்பதால் தாகமும் ஆயிற்று. தகிப்பு, தவிப்பு முதலானவற்றுக்குத் தக மூலமானது. இறந்தாரை தீயிட்டு எரிப்பதைத் தகனம் என்கிறோம். எனவே தகத்திற்குத் தேய் மூலமானது தேய்க்கு உகரமே வித்து.

தேயே தேவானது. தேவே தேவனையும் தேவியையும் தந்தது.

தேய்> தேவ்> தேவு
தேவு> தேவன்
தேவு> தேவி

தேயே தெய்வத்திற்கும் தாய். தேயால் தீ ஆனதால் தெய்வு + அம்= தெய்வம் உருவாகியது. தெய்வம் வானுறையும் தெய்வமாகிய கதிரவனைக் குறித்தது.
தேய் ஒளியைச் சுட்டியதால் தேய்> தேஜ் என வடமொழி வடிவம் பெற்று தேஜஸ் ஆனது. உடல் ஒளியைத் தேய் வழி தேஜஸ் என்றது வடமொழி

கூலாவாகிய குளம்...
Gula( M) daripada kulam (T)

குளம், குளகம் எனும் வெல்லவுருண்டை

உல்> உருட்சி, வளைவு கருத்து வேர்.
உல்>குல்>குலம்= கற்கண்டு. உருண்டு திரண்டு இருப்பதால் குலம் எனும் சொல் கற்கண்டு எனும் வெல்லத்திற்கு அமைந்தது.

குல்>குள்>குளம்> குளகம்= இதுவும் வெல்ல உருண்டையையே குறிக்கும்.

சூடாமணி, பிங்கலம், திவாகர நிகண்டுகளில் குளம், குளகம் சருக்கரை என்றே குறிப்பிடப்பட்டுள்ளது.

அழகிய மணவாள தாசர் இயற்றிய அட்டப்பிரபந்தம் எனும் நூல் தொகுப்பில்,

உள்ளம் குளம் தேனை ஒத்து ( 8: 9) என வரும் வரியில் குளம் எனும் சொல் சருக்கரையையே குறிப்பிடுகின்றது.

தமிழ் அகரமுதலிகள் பலவற்றுள்ளும் குலம், குளம், குளகம் சருக்கரை என்றே குறிப்பிடப்பட்டுள்ளன.

மலாய் மொழியில் இச்சொல்லை கூலா gula என்பர். Gulali என்றும் இச்சொல் மலாயில் விரிகிறது. பனைவெல்லம்( palm sugar) கற்கண்டு( candy– கண்டு), கருப்பஞ்சீனி முதலான சருக்கரை வகை மலாயில் கூலா என்றே குறிப்பிடப்படுகின்றது. தமிழிலிருந்து மலாய்க்குச் சென்ற அருந்தமிழ்ச் சொல்லே குளம் ஆகும். குளமே கூலாவாகத் திரிந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

### Cikgu மூல வேர்...

மலாய் மொழியில் cikgu எனின் ஆசிரியர் எனப் பொருள். இச்சொல் எவ்வாறு பிறந்தது என ஆராய்கையில் பெரு வியப்புத் தோன்றியது....

இராசராச சோழனின் மகன் முதலாம் இராசேந்திரச் சோழனின் மகள் அம்மங்கை தேவிக்கும் கீழைச் சாளுக்கிய மன்னன் இராசராச நரேந்திரனுக்கும் பிறந்தவன் தான் முதலாம் குலோத்துங்க சோழன். இவன் கி.பி.1070 இல் பிறந்தவன்.

இவன் பெயரில் உள்ள குலோத்துங்கன் எனுஞ் சொல்லில் துங்கன் என்றிருப்பதைக் காணலாம். துங்கன் எனின் முதன்மை மிக்க தலைவன் எனப் பொருள்.

உல் = முன்தோன்றல் கருத்து வேர்.

உல்> துல்> தும்> துங்கு = முதன்மை, தலைமை
துங்கு + அன் = துங்கன், முதன்மையானவன், தலைவன்.

துங்கன்>>> கடாரத்தில் சிறி விசய அரசன் விசயோத்துங்கன் பெயரில் துங்கன் எனுஞ் சொல்லின் வாயிலாகவும் பிற்பாடு ஏற்பட்ட சோழரின் தாக்கத்தின் வாயிலாகவும் துங்கன் எனுஞ் சொல் மலாயரிடத்து அரச மரபில் பெரிதும் போற்றப்படும் ஒரு சொல்லாக உருவாகியது.

துங்கன் > துங்கு ..
துங்கு >>> துங்க
மாற விஜயோதுங்க வர்மன்..

Maravijayottunggavarman
தஞ்சை இராசேந்திர சோழனின் மெய்கீர்த்தியில் இச்சொல் பயன்பாட்டைக் காணலாம்.

துங்கு > தெங்கு tengku
Tengku> engku > ungku

அச்சேயிலும் மலாயிலும் அரச மரபினைத் தெங்கு tengku என இச்சொல் குறிக்கும்.

சோகூர் மாநிலத்தில் இச்சொல் தெங்கு tengku என்றும் உங்கு ungku என்றுஞ் சொல்லப்பெறும்.

Engku எங்கு, tengku தெங்கு என்பன மினங்காபாவ் மொழியில் ஆசிரியர் எனப் பொருள்தரும். இந்தோனேசியாவில் பாக் pak என்றும் ஆசிரியரையும் மதிப்புக்குரியவரையும் அழைப்பர்.

Engku என மீனாங்காபாவ் மொழியில் ஆசிரியரைக் குறிக்கும் இச்சொல் chikgu எனச் சகர ஒலியேற்றுச் சற்றுத் திரிபடைந்துள்ளது.

Tungku > tengku > engku > chegku > chigku
Chigku > cikgu. ஆசிரியர்.

Engku Sulaiman ( Minangkabau)
Chikgu Sulaiman ( Malaysia)
Pak Sulaiman ( Indonesia)
( அப்பா>> பா ~ சொல்லுப்பா, கேளுப்பா ... பா > pak)

துங்கன் > துங்கு எனும் தமிழ்ச் சொல்லினின்று இந்தோனேசிய , மலாய் மொழிகளில் ஒலித்திரிபு ஏற்பட்டு இறுதியில் cikgu செக்கு என மாற்றம் பெற்று இன்று ஆசிரியரைக் குறிக்கின்றது..

### Edge என்பதன் வேர் மூலம் யாது?

பல்வேறு தூரிகைகளுக்குத் தமிழில் பெயர் சூட்ட முனைகையில் egbert brush எனும் தூரிகை பெயரைக் கண்டேன். Egbert எனக் குழந்தைகளுக்கும் ஆங்கிலர் பெயர் சூட்டி மகிழ்ந்துள்ளனர். Egbert என்பதன் பொருளையும் வேர் மூலத்தையும் காண்கையில் இதற்கு "edge" எனும் மற்றொரு சொல்லையும் வழங்கி இதனின்று மருவியதே egbert எனக் குறித்துள்ளனர். Edge எனுஞ் சொல்லுக்கோ முனை, மூலை, கூர்மை எனப் பொருள் விளக்கம் தரப்பட்டிருந்தது. இந்தோ ஐரோப்பிய மொழிக்குடும்பத்தில் இதன் வேர் ak எனச் சுட்டப்பட்டிருந்தது.

தமிழில்,

உல் = குத்துதல், கூர்மைப் பொருள் வேர்.
உல்> அல்= குத்துதல், கூர்மை , வெப்பம்
உல்> அல் > அற்கு , அக்கு > அஃகு = கூர்மை

அஃகி அகன்ற அறிவென்னாம் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின் ( குறள் : 175)

எனுங் குறளில் அஃகி அகன்ற அறிவு என்பார் வள்ளுவர். இங்கே மிகக் கூர்மையான நுட்பமான அதே வேளை விரிந்த அறிவு எனப் பொருளையே இத்தொடர் பொருள்தரும்.

தமிழில் எருத்துத் திமில், குவிதல், சுருங்குதல், கூரிய முனை, முள், முள்மணி ( சிவமணி ), அகில் முதலான பொருள்களை அக்கு எனுஞ் சொல் குறிக்கும்.

கூர்மையான உயர் முனைக் கோடு, மலை முகடு, மலை உச்சி, இரும்புக் கருவிகளின் கூர்மை, கடுங் கசப்பு, குத்தும் கூர்மையான ஊசி எனும் பொருளை இந்தோ ஐரோப்பிய மொழிகளில் இவ்வேரில் பிறந்த சொற்கள் குறிக்கின்றன.

Greek akros "at the end, at the top, outermost; consummate, excellent,"

akis "sharp point,"

akē "point of an iron tool,"

akantha "thorn,"

akmē "summit, edge,"

oxys "sharp, bitter;"

Sanskrit acri– "corner, edge,"
acani– "point of an arrow,"
asrih "edge;"

Oscan akrid (ablative singular) "sharply;"

Latin acer (fem. acris) "sharp to the senses, pungent, bitter, eager, fierce,"

acutus "sharp, pointed,"

acuere "to sharpen,"

acerbus "harsh, bitter,"

acere "be sharp, be bitter,"

acus "a needle, pin,"

ocris "jagged mountain;"

Lithuanian asmuo "sharpness,"

akstis "sharp stick;"

Old Lithuanian astras,

Lithuanian astrus "sharp;"

Old Church Slavonic ostru,

Russian ostryj "sharp;"

Old Irish er "high;"

Welsh ochr "edge, corner, border;"

Old Norse eggja "goad;"

Old English ecg "sword;"

German Eck "corner."

இவை அனைத்துக்கும் தமிழின் உல் எனும் ஆணி வேரே மூலமாகின்றது. தமிழின் ஊகாரச் சுட்டு வேரே ஏரணவியல் அடிப்படையில் தெளிவான விளக்கம் தரும். ஏன் அக் ak என்பது இந்தோ ஐரோப்பியத்தில் கூர்மைப் பொருளைத் தருகின்றது என்றால் அதற்கு மேல் விளக்கம் இருக்காது. ஆனால் தமிழில் மூல வித்து வரை ஏன் எதற்கு எனும் வினாக்களுக்கு விளக்கம் சொல்ல முடியும்.

நிறைந்த மொழி ஒப்பிட்டாய்வுகளும், வேர்ச்சொல் ஆய்வுகளும் நமக்குப் பல்வேறு முடிச்சுகளை அவிழ்த்து தெளிவினைக் காட்டுவிக்கும். பாவாணரியம் இதற்கு அடிப்படையாய் அமைந்து பெருந்துணை புரியும்.

## கலப்பை – ஒருபொருட் பன்மொழி

| | |
|---|---|
| அயில் | கலனை |
| அலம் | கொடுநுகம் |
| ஆலம் | தொடுப்பு |
| உழுபடை | நாஞ்சில் |
| உழுபடைச்சால | மேழி |
| கலப்பை | வாள் |

# ஆய்த எழுத்து – மெய்யா? உயிர்மெய்யா ?

புலவர் வெற்றியழகன்
தலைவர்,
தொல்காப்பியர் தமிழ்ச்சங்கம், சென்னை



## முன்னுரை

தமிழெழுத்துகளை உயிரெழுத்து – மெய்யெழுத்து – ஆய்த எழுத்து என்று வகைப்படுத்தியுள்ளனர். தமிழ்மொழி அறிவியல் மொழி. உடல் – உயிர் – உரை என்று கொள்ளுதல் வேண்டும்.

தாயின் வயிற்றில் முதலில் உடல் உருவாகின்றது. பிறகுதான் அதில் உயிர் சேர்கின்றது. வெளியே வந்தவுடனே – குழந்தை கொடுக்கும் முதற்குரல் – அஃ – என்பதுதான். அதன் பிறகே அழுகை ஒலி. அதனால், முதலில் உடல் – மெய்யெழுத்துகளும்; பிறகு உயிர் – உயிரெழுத்துகளும்; அதன் பிறகே உரை – ஒலி, அஃதாவது – ஃ – ஆய்தம்.

அகரச் சுவடி – அகரத்திலிருந்து கற்றுக்கொடுப்பது என்று பொருள். அரிச்சுவடி என்பது – திருமால் சுவடி என்றுதான் பொருள்.

இவ்வாறு சுவடி ஆவணப்படுத்தியோர் – ஆன்மிகக் கருத்தினை உள்ளடக்கிக்கொண்டு, முதலிலே உடலை (பிணத்தை) முதலில் கூறக்கூடாது என்று கருதிக்கொண்டு – உயிரை – அஃதாவது உயிர் எழுத்துகளை முதலிலும் – மெய்யெழுத்துகளை இரண்டாவதாகவும் – ஆய்த எழுத்தினை மூன்றாவதாகவும் அமைத்துவிட்டனர். அதனையே இந்நாள்வரையிலும் கடைப்பிடித்துக்கொண்டு வருகிறோம்.

முதலில் ஆய்த எழுத்து; இரண்டாவது மெய்யெழுத்துகள்; மூன்றாவதாக உயிரெழுத்துகள்; நான்காவதாக உயிர்மெய் யெழுத்துகளை அமைத்திருத்தல் வேண்டும்.

ஆய்த எழுத்து மெய்யெழுத்தா? உயிர்மெய்யெழுத்தா? அல்லது இரண்டும் சேர்ந்ததா? என்று ஆராய்வதே இக்கட்டுரையினது நோக்கம்.

## தொல்காப்பியத்தில்

"உருவினும் இசையினும் அருகித் தோன்றும்
மொழிக்குறிப் பெல்லாம் எழுத்தின் இயலா
ஆய்தம் அஃகாக் காலை யான"
(தொல்.40)

இந்த நூற்பாவுக்கு – உரையாசிரியர் இளம்பூரணர் – "ஒருபொருளினது உருவத்தின்கண்ணும் ஓசையின்கண்ணும் சிறுபான்மையாய்த் தோன்றும் குறிப்பு மொழிகளெல்லாம் ஆய்த எழுத்தானிட்டு எழுதப்பட்டு நடவா (அஃது எக்காலத்துமோ எனின் அன்று) அவ் ஆய்தம் தன் அரை மாத்திரை அளபாய்ச் சுருங்கி நில்லாது (அவ்வுருவும் இசையது மிகுதியும் உணர்த்துதற்கு) நீண்ட காலத்து அந் நீட்சிக்கு" – எ.டு: கஃறென்றது – என்பது உருவு; சுஃறென்றது என்பது இசை, என்று குறித்துக் காட்டியுள்ளார்.

"அவ் ஆய்தம் தன் அரை மாத்திரை அளபாய்ச் சுருங்கி நில்லாது, அவ் வுருவும் இசையது மிகுதியும் உணர்த்துதற்கு நீண்ட காலத்து அந் நீட்சிக்கு" என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்து – ஆய்தம் – தன் அளவான அரை மாத்திரை ஓசையைவிட நீண்டு ஒலிக்கும் – என்பதனைக் கூறியுள்ளார்.

ஆகையால், முற்றாய்தம் – ஒரு மாத்திரை அளவும் – மெய்யாக இயங்கும்போது அரை மாத்திரையும் – ஆய்தக் குறுக்கத்தின்போது கால் மாத்திரை அளவும் கொண்டு ஒலிக்கும் என்று கொள்ளுதல் வேண்டும்.

அதனால்தான் – ஆய்தத்துக்குத் "தனிநிலை" என்று பெயரிட்டிருக்கின்றனர். ஆய்தம் எப்படியெல்லாம் தனிநிலை என்பதனை – விளக்கினால் அதுவே ஒரு கட்டுரையாக விரியும். ஒன்றனை மட்டும் இங்கே சுட்டிக்காட்டிவிடுகிறேன்.

உயிருடனும் சேராது மெய்யுடனும் சேராது அதனால் ஆய்தம் தனிநிலை என்கின்றனர். இது தவறு. ஆய்தம் உயிருடனும் சேரும், மெய்யுடனும் சேரும், உயிர்மெய்யுடனும் சேரும் என்பதால்தான் ஆய்தம் தனிநிலை என்று கூறப்பெறுகின்றது.

ஆய்தம் அரை மாத்திரை பெறுகின்ற இடம் – எஃகு, கஃசு – என்கின்ற இடம். ஆய்தம் கால் மாத்திரை பெறுகின்ற இடம் – அல் + திணை = அஃறிணை, முள் + தீது = முஃடீது ஆகிய இடங்கள்.

ஒருமாத்திரை பெறுகின்ற இடத்தினைத் திருவள்ளுவர் ஒருவர் மட்டுமே – தமது அரும் படைப்பான திருக்குறளில் பன்னிரண்டு குறள்களில் பயன்படுத்திக் காட்டியுள்ளார். இந்த உண்மை தெரியாமல் உரையாசிரியர் சிலர் – அந்தக் குறள்களைத் திருத்தி வெளியிட்டுள்ளனர்.

**திருக்குறள் சான்று**

திருவள்ளுவர் தமது திருக்குறளில் அய்ம்பத்தைந்து இடங்களில் ஆய்த எழுத்தினைப் பயன்படுத்தியுள்ளார். அவற்றுள் நாற்பத்து மூன்று குறள்களில் மெய்யெழுத்தாகவும் – பன்னிரண்டு குறள்களில் உயிர்மெய்யெழுத்தாகவும் பயன்படுத்தியுள்ளார்.

**அவற்றைக் காண்போமாக:-**

"அன்பீனு மார்வ முடைமை அஃதீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு" (திருக்.74)

அன்பீனும் – காய். காய்முன் நேராக – ஆர்வம் – என்று நேராகத் தொடங்கியுள்ளார். ஆர்வம் – தேமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும். அஃதீனும் – என்று – ஆய்தத்தில் தொடங்கியுள்ளார். இங்கு – ஆய்தத்தினை – உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

இந்த நுட்பம் அறியார் – அது ஈனும் – என்று பதிப்பித்துள்ளனர்.

"அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி" (திருக்.226)

அற்றார் – தேமா; மாமுன் நிரை வருதல் வேண்டும். அழிபசி; அழிபசி – கருவிளம்; விளமுன் நேர் வருதல் வேண்டும். தீர்த்தல்; தீர்த்தல் – தேமா; மாமுன் நிரை வருதல் வேண்டும். அடுத்த சீர் அஃதொருவன் என்று அமைந்திருக்கின்றது. இங்கு ஆய்த எழுத்தினை மெய்யெழுத்தாகக் கொண்டால், மாமுன் நேர் என்று அமைந்து வெண்டளை பிழையாகிவிடும்.

இந்த இடத்தில் – ஆய்த எழுத்தினை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் – ஆம்; அகுதொருவன் என்பதனைப் போல் ஒலித்தல் வேண்டும். அஃதொருவன் என்பதனைப் போல் ஒலித்தல் கூடாது. அகுதொருவன் என்று ஒலித்தல் மட்டுமில்லை– அவ்வாறுதான் கருதுதல் வேண்டும். அப்பொழுதுதான் வெண்டளை பிழையாமல் அமையும்.

"ஈதல் இசைபட வாழ்தல் அஃதல்ல
தூதியம் இல்லை உயிர்க்கு" (திருக். 231)

வாழ்தல் – தேமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும் என்று கருதிக்கொண்டு பலரும் – அதுவல்லது – என்றே பதிப்பித்துள்ளனர்.

"காய்முன் நேரும் விளமுன் நேரும்
மாமுன் நிரையும் வரும்வெள் ளைக்கே"

என்னும் காக்கை பாடினியாரின் நூற்பா சரியானதாக அமையும்.

வெண்பாவின் இலக்கணம் தெரியாமல் திருவள்ளுவர் மாமுன் – அஃதொருவன் என்று ஆய்தத்தினை மெய்யாக அமைப்பாரா?

வெண்டளை பிழையாக அமைந்துவிடுமே என்று கருதி – அது ஒருவன் – என்று நிரையில் அமைத்தல் கூடாதா? – அவ்வாறு அமைத்தால் வேறொரு பிழை நேரும். அதனை உணர்ந்தே இந்த முறையினைத் திருவள்ளுவர் கையாண்டுள்ளார்.

அது – என்பது – சுட்டே இல்லை. தொல்காப்பிய விதிப்படி – அஃது – என்பதுதான் சுட்டு. வருகின்ற சொல் உயிரெழுத்தில் இருக்குமானால் ஆய்தம் அப்படியே இருக்கும். உயிர்மெய்யாக இருக்குமானால் ஆய்தம் கெடும் என்கிறார் தொல்காப்பியர்.

"முன்னுயிர் வருமிடத்து ஆய்தப் புள்ளி
மன்னல் வேண்டும் அல்வழி யான"
(தொல்.423)

"ஏனை முன்வரினே தான்நிலை இன்றே"
(தொல். 424)

அஃது என்னும் சுட்டுச் சொல்லினை அடுத்து உயிரெழுத்தினை முதலாவதாகக் கொண்ட சொல் வருமாயின் ஆய்தம் அப்படியே இருக்கும். உயிர்மெய்யெழுத்தினை முதலாவதாகக் கொண்ட சொல் வருமாயின் ஆய்தம் கெடும். எ.டு: அஃது ஆடு; அது கழுதை. இந்த நிலை இருப்பதனால்தான் – அஃதொருவன் – என்று ஆய்தத்துடன் சுட்டிக் கூறுகின்றார் திருவள்ளுவர்.

"வேண்டாமை யன்ன விழுச்செல்வ
மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில்" (திருக்.363)

வேண்டாமை காய் – அதனால் அன்ன நேரில் தொடங்கியுள்ளார். அன்ன – தேமா. அதனால் விழுச்செல்வம் நிரையில் தொடங்கியுள்ளார். விழுச்செல்வம் – காய். அதனால் ஈண்டில்லை – என்று நேரில் தொடங்கியுள்ளார். ஈண்டில்லை – என்பது – காய். அதனால் யாண்டு என்று நேரில் தொடங்கியுள்ளார். யாண்டு என்பது தேமா. இப்பொழுது நிரையில் தொடங்குதல் வேண்டும். அஃதொப்ப – என்று – ஆய்தத்தில் தொடங்கியுள்ளார். இங்கே ஆய்தத்தை மெய்யாக எடுத்துக்கொண்டால், வெண்டளை பிழையாகிவிடும். இங்கே ஆய்தத்தை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

இல் – நாள் என்னும் வாய்பாடு.

"கற்றில னாயினுங் கேட்க அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாந் துணை"(திருக். 414)

இந்தக் குறளில் கேட்க – தேமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும். அஃதொருவற்கு – என்று ஆய்தம் அமைந்திருப்பதனால், இங்கும் ஆய்தத்தினை – உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

"பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை அஃதுலகத்
தெப்பால்நூ லோர்க்குந் துணிவு" (திருக்.533)

புகழ்மை – புளிமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும். ஆனால், அஃதுலகத் – என்று ஆய்தம் அமைந்துள்ளது. இங்கும் ஆய்தத்தினை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும். இந்த நுட்பம் அறியார் பதிப்பில் "அது உலகத்து" என்று பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

"இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை
வாயின் அஃதொப்ப தில்" (திருக். 536)

இந்தக் குறளில் – வாயின் – தேமா. அடுத்து அஃதொப்ப என்று – அமைத்திருப்பதனால் – இங்கும் – ஆய்தத்தினை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும். இந்த உண்மை உணர்ந்தோர் பதிப்பில் – அஃதொப்ப – தில் – என்றும் – இந்த உண்மையை உணராதார் பதிப்பில் – அதுவொப்ப – தில் – என்றும் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

"கல்லார் பிணிக்குங் கடுங்கோன் அஃதல்ல
தில்லை நிலக்குப் பொறை" (திருக். 570)

கடுங்கோன் – புளிமா – மாமுன் நிரை அமைதல் வேண்டும். அஃதல்ல– து– என்று ஆய்தம் அமைந்துள்ளது. இங்கும் ஆய்தத்தினை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

"அற்றால் அளவறிந் துண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு" (திருக். 943)

உண்க – என்பது – தேமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும். அஃதுடம்பு – என்று – ஆய்தம் அமைந்துள்ளது. ஆய்தத்தினை இங்கு உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

"பண்புடையார்ப் பட்டுண் டுலகம் அஃதின்றேல்
மண்புக்கு மாய்வது மன்" (திருக். 996)

உலகம் – புளிமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும். அஃதின்றேல் என்று ஆய்தம் அமைந்துள்ளது. இங்கும் ஆய்தத்தினை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

"கவ்வையால் கவ்விது காமம் அஃதின்றேல்
தவ்வென்னுந் தன்மை யிழந்து" (திருக்.1144)

காமம் – தேமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும். அஃதின்றேல் என்று ஆய்தம் அமைந்துள்ளது. இங்கும் ஆய்தத்தினை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

"இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதடுங்கால்
துன்பம் அதனின் பெரிது" (திருக்.1166)

காமம் – தேமா. மாமுன் நிரை அமைதல் வேண்டும். அஃதடுங்கால் – என்று ஆய்தம் அமைந்துள்ளது. இங்கும் ஆய்தத்தினை உயிர்மெய்யாகக் கொள்ளுதல் வேண்டும்.

**முடிவுரை**

அஃதொருவன் – 38, அஃதிலார்க்கு – 80, அஃதில்லார் – 170, அஃதொருவன் – 220, அஃதில்லார் – 236, அஃதுண்டேல் – 368, அஃதிறந்து – 476, இவை உயிர் வந்ததனால் – அஃது – என்று – ஆய்தத்தினை நீக்காமற் பயன்படுத்தியுள்ளார் திருவள்ளுவர். அதனை – மறத்தல் – 32, அது விளிந்தற்று – 332, அதுபெற்றால் – 333, அதுபொருள் – 477, அதுநோக்கி வாழ்வார் – 528, அஃது என்னும் சுட்டினை அடுத்து உயிர்மெய் வந்ததனால் – ஆய்தம் கெட்டு அது என்று புணர்த்தியுள்ளார் திருவள்ளுவர்.

இந்தப் பொதுவிதி இருப்பதனால்தான் – அஃது என்று – ஆய்தத்துடன் அமைத்திருக்கிறார் திருவள்ளுவர். அதனால் ஆய்த எழுத்து – ஒரு மாத்திரை பெறும் "அகு" என்னும் நிலையிலும்; அரைமாத்திரை பெறும் மெய்யெழுத்து நிலையிலும்; அஃறிணை – என்று கால்மாத்திரை பெறும் ஆய்தக் குறுக்கமாகவும் – ஆய்தம் மூன்று நிலைகளில் அமையும். உயிர்மெய்யாக – மெய்யாகத் திருவள்ளுவர் ஆய்தத்தினை அமைத்தெழுதியுள்ளார் என்பதனை அறிந்துகொள்வோமாக.

உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து
(திருக்குறள் 1032)

# பட்டடை

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு."
(திருக்குறள் – 821).

கருமார் (கொல்லர்) பட்டறையில் பழுக்கக் காய்ச்சிய கம்பிகளை வைத்து அடிக்கவும், வெட்டவும் பயன்படும் வலிய இரும்புத் துண்டம் பட்டடை என்றும், பட்டடைக் கல் என்றும் கூறப்படும்.

இரும்புக் கம்பி, 'அடடா, இந்தப் பட்டடைக் கல் எவ்வளவு உயர்வானது, நம்மைத் தாங்கிப் பிடித்திருக்கிறதே' என்று நினைக்குமாம், நம்புமாம், மகிழ்ச்சி அடையுமாம்! வாய்ப்புக் கிடைத்தால் இந்தப் பட்டடை என்ன செய்யுமாம், இரும்புக் கம்பியைத் தாங்குவது போல இருந்து அதனை அடித்து, வளைத்துத், துவைத்து வெட்ட வரும் வெட்டிரும்புக்கும் சம்மட்டிக்கும் துணை செய்யுமாம்! இப்படிப்பட்ட பட்டடை நண்பர்களை நம்ப வேண்டாம் என்று வள்ளுவர் சொல்கிறார்.

பட்டடையும் சம்மட்டியுமாக இரும்பு வேலை செய்யும் இடம் பட்டடை என்று அழைக்கப்பட்டு இப்போது பட்டறை என்று அழைக்கப்படுகிறது.

"தச்சுப் பட்டறை வைச்சது போலவும்
அச்சுப் பீப்பாய் அடிப்பது போலவும்
இப்படித் தட்டி இன்னல் விளைக்கிறீர்?"
(பாவேந்தர், இருண்ட வீடு)

நம் காதுகளில் ஒலியலைகளை வாங்கி உட்செவிக்கு அனுப்பும் பணியை நடுச்செவியில் இருந்து செய்யும் எலும்புகள் பட்டடை, சுத்தியல், அங்கவடி (anvil, hammer, stirrups) என்று அழைக்கப்படுகின்றன.

சமட்டுதல் = ஓங்கி வலிவாக அடித்தல்,
சமட்டி = ஓங்கி அடிக்கப் பயன்படுவது.
சமட்டி > சம்மட்டி.
சமட்டு > smite. (அடித்துக் கொல்லுதல்). > scimitar.
சமட்டு > சவட்டு, சவட்டை, சாட்டை.
'And when the LORD thy God shall deliver them before thee; thou shalt smite them, and utterly destroy them; thou shalt make no covenant with them, nor shew mercy unto them.' (Bible).

'கொல்லன் பட்டறையில் ஊசி விற்பதா?' என்பது பழமொழி. ஆங்கிலத்தில் selling coal to New Castle என்பார்கள்.

இப்போது 'திருப்பதிக்கே இலட்டா, பழநிக்கே பஞ்சாமிர்தமா, இமய மலையிலே நீ ஐஸ் விக்கிற ' என்று பல வகைகளில் சொல்கிறோம்.

கொல்லர் பட்டடையில் இராட்டினம் சுற்றித் தீக் கங்குகளை உருவாக்குவதைப் பார்த்திருக்கலாம். தோற்பையினால் உலை ஊதும் வழக்கமும் உண்டு. தெருவில் ஈயம் பூசுகிறவர்கள் பயன்படுத்துவார்கள். இப் பை பழந்தமிழில் குருகு என்று அழைக்கப்பட்டுள்ளது.

"அசைவரல் வாடை தூக்கலின், ஊதுஉலை
விசை வாங்கு தோலின், வீங்குபு ஞெகிழும்"
(அகநானூறு – 96)

"புல் அளைப் புற்றின் பல் கிளைச் சிதலை
ஒருங்கு முயன்று எடுத்த நனை வாய் நெடுங்கோடு
இரும்பு ஊது குருகின், இடந்து, இரை தேரும்"
(அகநானூறு– 81)

"கொல்லன் குருகு ஊது மிதி உலை"
(அகநானூறு– 202)

"கொல்லன் ஊது உலைக் குருகின்
உள் உயிர்த்து" (நற்றிணை – 125)

காலால் மிதிக்கும் ஊதுலையும் இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளதைக் காணலாம்.

'முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉம்
கற்றன மென்று களியற்க – சிற்றுளியாற்
கல்லுந் தகருந் தகரா கனங்குழாய்!
கொல்லுலைக் கூடத்தி னால்.'
(குமரகுருபரர் – நீதிநெறி விளக்கம்)
கூடம் = சமட்டி.

3000 ஆண்டுகளுக்கு முன்பு தமிழர்கள் இரும்பு உருக்கு ஆலை வைத்திருந்ததற்கான சான்றுகள் ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வில் கிடைத்துள்ளன.

குலமெனப் படுவதும் தமிழே
கோவெனப் படுவதும் தமிழே
நலமெனப் படுவதும் தமிழே
நாடெனப் படுவதும் தமிழே
– தேவநேயப் பாவாணர்

# அவை : போலி ஒப்புருச் சொல்லாக...



முனைவர் ப. கொழுந்தசாமி,
அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

தொன்மையான கன்னித் தமிழ் இலக்கண வளமுடையது; மொழி வரலாற்று மாற்றங்களையும் நுட்பங்களையும் உள்ளடக்கியது. கால/பண்பாட்டு, அறிவு வளர்ச்சி, புதுத் துறை அறிமுகம், சொற்சிதைவு ஆகிய காரணங்களால் தமிழ்ச் சொற்கள் சிலவற்றின் கருத்தை அறிவதில் இடர்ப்பாடு நேர்வதுண்டு.[கருதுக: ஆறு] அப்போது பொருண்மையியல் நோக்கில் அணுகின் பொருள் தெளிவு வாய்ப்பாகும். அந் நிலையில் அவை எனும் சொல் நோக்கத்தக்கது.

அது + கள்> அவை என்னும் உயிரீற்றுப் புணர்ச்சியில், அது என்னும் ஒன்றன்பால் சேய்மைச் சுட்டுப்பெயருடன் கள் என்கின்ற பன்மை விகுதி பின்னொட்டாக ஒட்டும்போது, திரிந்து அவை என்று பன்மைச் சுட்டுப்பெயராக ஆகின்றது. அப்போது,

அது வருகின்றது / அவை வருகின்றன

என்னும் தொடர்கள் ஆகுகின்றன. அடுத்து, மக்கள், அறிஞோர் கூடுகை / அரசவை/ கலையரங்கம் ஆகியவற்றைச் சூழலுக்கேற்பச் சுட்டுகின்ற ஒன்றன்பால் பெயர்ச் சொல்லாகவும் இயல்கின்றது. அப்போது,

பேரவைக் கூட்டம், அவையல் கிளவி

போன்ற தொடர்கள் ஆகின்றன. பன்மைச் சுட்டான அவையும் , ஒன்றன்பால் பெயரான அவையும், பெயர் என்னும் ஒரே இலக்கண வகையைச் சார்ந்தவையாயினும் சொல்லாக்கத்தில் மாறுபாட்டவை. அதனால் இவற்றைப் போலி ஒப்புருச் சொற்களாகக் கொண்டு கருத்துணரலாம்.

விளக்கவியல் இலக்கணப் பனுவலான தொல்காப்பியத்தில்,

அவை இவை உவை என வரூஉம் பெயரும் ( பெயரியல், நூ. 13 )

அவையல் கிளவி ( எச்சவியல், நூ. 46 )

என்னும் நூற்பாக்களில் முறையே பன்மைச் சுட்டுப்பெயராகவும் ஒன்றன்பால் பெயராகவும் 'அவை' இயல்வது சுட்டப்பட்டுள்ளது. மொழி மரபைப் பின்பற்றும் திருக்குறளில்,

கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு அவைதாம்
முடிந்தாலும் பீழை தரும். ( 658 )

அவையறிந்து ஆராய்ந்து சொல்லுக ... (711)

என்னும் குறட்பாக்களில் முறையே பன்மைச் சுட்டுப்பெயராகவும் ஒன்றன்பால் பெயராகவும் 'அவை' இயல்வது ஒப்பத்தக்கது.

இவ்வாறாக, ஒப்புருச் சொல்லாக அவை இன்றளவும் வழங்கப்படு– கின்றது. இது தமிழின் இலக்கணக் கட்டுக்கோப்பு / மொழி வளப் பெருமையாகும்.

# பொங்கல் காலப் பதங்கள்



அண்டனூர் சுரா (எ) சு. இராஜமாணிக்கம்
பட்டதாரி ஆசிரியர், முதுகுளம்,
புதுக்கோட்டை மாவட்டம்

பொங்கல் என்பது நான்கு நாள்கள் கொண்டாடப்படும் பண்டிகை. போகி, பொங்கல், மாட்டுப்பொங்கல், மாடு விடுதல் என்று. இந்த மாடு விடுதல் பல ஊர்களில் பல சொல்லாக இருக்கிறது. சல்லிக்கட்டு, எருது விடுதல், கயிறு மாடு விடுதல், மாட்டு வேடிக்கை, ஏறு தழுவல், மாடு திறப்பு, எருது விளையாட்டு, மந்தை.. இப்படியாக.

### பெரும்பொங்கல்

நான்கு நாள் பொங்கலையும் எந்தக் குடும்பம் சிறப்பாகக் கொண்டாடுகிறதோ அவர்களுக்கு அது பெரும்பொங்கல்.

**தலைப் பொங்கல்** – திருமணம் செய்துகொண்ட புது இணையர் வைக்கும் பொங்கல்.

**கடைப் பொங்கல்** – கடைசிப் பொங்கல். மூதாட்டி உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கையில் அவர் அடுத்த பொங்கலுக்கு அவர் இருக்க மாட்டார் என்பதைச் சொல்லும் பொங்கல், கடைப் பொங்கல்.

**வருடப் பொங்கல்** – இறந்தவர்களுக்குப் பொங்கிப் படைக்கும் பொங்கல்.

**பட்டத்துப் பொங்கல்** – ஒருவர் தன் வயலில் நெல் விளைவித்து அறுத்து நெல்லை இடித்து அந்த அரிசியில் வைக்கும் பொங்கல்.

**ஊர்ப் பொங்கல்** – ஊரே திரண்டு ஓரிடத்தில் வைப்பது. தற்காலத்தில் இப்பொங்கல் சமத்துவப் பொங்கல் என்று அழைக்கப்படுகிறது.

### மாட்டுப் பொங்கல்

பொங்கலின் இரண்டாம் நாள் பொங்கல் வைத்து மாட்டுக்குச் சோறூட்டிக் கொண்டாடுவது.

### தழுகைக் குழம்பு

பொங்கல் அன்று மாட்டுக்கு வைக்கும் பருப்புக் குழம்பு சிறப்பானது. ஊரில் விளையும் காய்கறிகளைக் கொண்டு இக்குழம்பை வைப்பர். இதற்குத் தழுகைக் குழம்பு என்று பெயர்.

### தழுகைப் பதம்

சில ஊர்களில் மாட்டுப் பொங்கலில் போடும் படையலைத் தழுகைப் பதம் என்பர். இங்கு, பதம் என்பது குழம்பு. தழுகை என்பதற்கு இலை படையல் என்று பொருள். பொங்கல் வைத்துப் பதமாக இறக்குங்கள் என்றும் சொல்வர். இங்கு, பதம் என்பதற்குப் பக்குவம் என்று பொருள். மேலும் பதம் என்பதற்கு உணவு என்றொரு பொருளுண்டு.

### தழுகைச் சோறு

பலா இலைகளைப் பறித்துக் காட்டுச் சீவாங்குச்சியை நெருப்பில் பதமாகக் காட்டி அதை இரண்டாக வகுந்து, இலைகளைப் பெரிதாகத் தைத்துப் படையல் போடுவர். தழுகைச் சோற்றை வாங்கித் தின்றால் மாடு பெருகும் என்பது மக்களின் நம்பிக்கை. தழுகையில் இலை முழுக்க சோற்றைக் குவித்து அதன் நடுவில் குழி பறித்து, அதில் பால், வெல்லம், உரித்த வாழைப் பழங்களை அடுக்கி அதில் பருப்புக் குழம்பை ஊற்றி எல்லாவற்றையும் பிசைந்து உருண்டையாக உருட்டிக் கொடுப்பர். இதற்குத் தழுகைச் சோறு என்று பெயர். பெருந்தழுகை, தனித்தழுகை என இரு தழுகைகள் உண்டு.

### பெருந்தழுகை

பங்காளிகள் ஒன்று திரண்டு பொங்கல் வைத்து படைக்கும் தழுகை பெருந்தழுகை.

### தனித்தழுகை

ஒரு குடும்பத்தின் படையல் தனித் தழுகை. தழுகையைப் பிரிப்பதற்கு முன்பு, பொங்கலோ பொலி, பொங்கலோ பொலி...என மாடுகளுக்குச் சோறு ஊட்டி, சுற்றி வருவார்கள். பொலி என்றால் பொலிக என்று பொருள். அதாவது பெருக. செல்வம் கொழிக்க எனப் பொருள் கொள்ளலாம்.

### மாட்டின் வகைகள்

சிற்றூர்ப்புறங்களில் பல வகை மாடுகளின் பெயர் விளங்குகின்றன. அத்தக்கருப்பன், கருங்கூழை, காற்சிலம்பன், ஏரிச்சுழியன்,

நெட்டைக்காலன்,...என்று. எல்லா மாடும் எல்லார் வீட்டிலும் வளர்ந்துவிடுவதில்லை. மாடு முகலட்சணமாக இருக்கும். வாங்கி வந்து வீட்டில் வளர்ப்பார்கள்.

### மரடு

கன்று ஈனாத மலட்டு மாடு மரடு.

தமிழுக்கும் எழுத்துக்கும் சொல் இலக்கணம் இருப்பதைப் போன்று மாட்டுக்கும் இலக்கணம் உண்டு. மாட்டின் இலக்கணம் என்பது சுழி. நெற்றிச் சுழியைப் பார்த்தே இன்றைக்கும் மாடு பிடிக்கிறார்கள்.

### மாட்டின் சுழிகள்

நெற்றியில் சுழிமேல் சுழி இருந்தால் அதற்குக் குடைமேல் குடை என்று பெயர். இந்தச் சுழி குடும்பத்திற்கு ஆகாது என்பர். இது தவிர பூரான் சுழி, விலங்குவைச் சுழி, தாமணிச்சுழி, விரிசுழி எனப் பல சுழிகள் உண்டு.

### மாட்டின் அலங்கார அணிகலன்கள்

மாடுகளை அலங்கரிக்கும் அணிகலன்களாக மணி, மூக்கணாங்கயிறு, மோகரை, சாட்டை வெண்டையம், தண்டை, சலங்கை, கொப்பி, பித்தளைக் கொப்பி, முருக்காத்தி, செயின், கொம்புக் கயிறு, கழுத்துக் கயிறு என்று பல உண்டு. இதில் மோகரை என்பதைச் சில ஊர்களில் முகரை என்றும் மொவர என்றும் சொல்லப்படுகிறது. கன்றின் மேல்கீழ் வாயைக் கழுத்தோடு இணைக்கும் கயிறு இது. இது தவிர பூட்டான் கயிறு, வாக்கூடு கயிறு, தும்புக்கயிறு, சலங்கைக்கட்டு, சங்குக்கட்டு, கொம்புக்கயிறு, கழுத்துக்கயிறு, மணிக்கயிறு,...என்று பல உண்டு.

பொங்கல் என்பது மூன்று, நான்கு நாள்கள் கொண்டாடும் விழா என்றாலும் பொங்கலுக்கான ஏற்பாடுகள் பதினைந்து நாள்களுக்கு முன்பே தொடங்கிவிடுகிறது. பொங்கல் என்றால் கரும்பு, மஞ்சக்கொத்து, தேங்காய், வாழைத்தார், கண்ணுப்பூழை, மாட்டுக்கு மாலை, புதுக்கயிறு என்பதோடு நின்றுவிடுவதில்லை. கரும்பு வாங்குவதற்கு முன்பாக மாடு வளர்ப்பவர்கள், கயிறு திரிக்கத் தொடங்கி விடுவார்கள்.

தேங்காய் நார் கயிறுகள் மாட்டுக்கு உதவாது. புளிச்சை நார் கயிறும், கற்றாழை நார் கயிறுமே மாட்டுக்கு உகந்தது. அதற்காக அவர்கள் புளிச்சைக்கீரை தண்டையும் கற்றாழைகளையும் சேகரிக்கத் தொடங்கிவிடுவார்கள். அதைக் குளம் குட்டைகளில் ஐந்து நாள்களுக்கு மூழ்கவைத்து ஊற வைப்பர். ஊறவைத்தத் தண்டுகளை எடுத்து, தேங்காய்ச் சிரட்டையால் வரண்டி உராய்ப்பார்கள். நார் தனித்தனியாக வரும். அதையடுத்து தண்ணீரில் கழுவிக் காயவைத்து, அதிலிருந்து கயிறு திரிப்பார்கள். அதிலேயே மாட்டுக் கொம்புக்கான குஞ்சம், தும்புக்கயிறு, மூக்கணாங்கயிறுகளைச் செய்வார்கள்.

### சல்லியடித்தல்

புளிச்சந்தண்டு, கற்றாழை இவற்றிலிருந்து நார் பிரித்தெடுக்கும் முறைக்குச் சல்லியடித்தல் என்று பெயர். சல்லியடித்தல் என்பதற்குச் சில்லுச் சில்லாகப் பிரித்தல். சுக்குச் சுக்காக்குதல். நொறுக்குதல், உடைத்தல். குலைத்தல்,... என்பதாகப் பொருள் கொள்ளலாம்.

சல்லி என்றால் சிறியது என்று பொருள். சல்லித்தனமாக நடந்துகொள்ளாதே என்றொரு வழக்கு நம்மில் உண்டு. அதாவது சின்னத்தனமாக நடந்துகொள்ளுதல். வேரில் ஒரு வகை சல்லி வேர்.

அழகாகப் பின்னிய கயிற்றையும் குஞ்சத்தையும் மாட்டின் கழுத்தில், கொம்பில், முட்டாறில் கட்டுவதற்குப் பெயரே சல்லிக்கட்டு.

### முட்டாறு என்பது திமில்.

பொங்கல் நாளன்று, கெட்ட காரியம் எதுவும் நடந்துவிடக்கூடாது. "பெருநாளும் அதுவுமா?" என்கிறச் சொற்றொடரைப் பயன்படுத்துவார்கள். பொங்கல் நாளன்று மூளும் பகை, ஒவ்வொரு பொங்கலின் போதும் கங்கணம் கட்டி பெருஞ்சண்டையாக மூளும். "பானை பொங்குனுச்சா?" "ஒங்காலு வீங்குனுச்சா?" முறைப்பையன், பெண்களுக்கிடையேயான உரையாடல்.

பொங்கல் வரும் ஒரு வாரத்திற்கு முன்பு இன்னும் எட்டு நாளைக்கும் பொங்கல் என்று கணக்கிடும் ஏழை எளிய மக்கள் பிறகு அப்பாடா, ஒரு வழியாகப் பொங்கல் போயிருச்சு என்று பெருமூச்சு விடுமளவிற்குப் பொங்கல் செலவினப் பண்டிகையாகிவிட்டது.

### மூடு பொங்கல்

பொங்கலுக்கு முன்பு யாரேனும் இறந்துபோனால் பானையைப் பொங்காமல் இறக்கி வைப்பர். இதற்கு மூடுபொங்கல் என்று பெயர்.

இப்படியாகப் பொங்கல் காலக் கலைச் சொற்களோடு சேர்த்துக் கொண்டாடப்படுகிறது, பொங்கல் திருநாள்.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 147–ஆவது கூட்டம்




இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக்கழகம்' செயற்பட்டுவருகிறது. மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

அந்தவகையில் இவ்வியக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 147–ஆவது கூட்டம் 19.12.2023 ஆம் நாள் அகரமுதலி இயக்ககத்தில், இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், எழுத்தாளர் அகநம்பி மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்ட இக்கூட்டத்தில் 166 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பட்ட கலைச்சொற்களுள் சில:

| | | |
|---|---|---|
| Apartheid system | – | இனவெறி அமைப்பு |
| Backhaul | – | சுமை மீளேற்றல் |
| Beige flag | – | ஒருபாற்கோடாமை |
| Condition monitoring | – | நிலை கண்காணிப்பு |
| Delivery network | – | வழங்கல் வலையமைப்பு |
| Fabulosity | – | வியனிலை |
| Fabulous city | – | வியன் நகரம் |
| Harbour facilities | – | துறைமுக ஏந்துகள் |
| Login password | – | நுழைவுக் கடவுச்சொல் |
| Login session | – | நுழைவு அமர்வு |
| Multimedia resource | – | பல்லூடக வளம் |
| Optimized version | – | செம்பதிப்பு |

# தமிழ்க் கலைக்கழகத்தின் 148–ஆவது கூட்டம்




இவ்வியக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 148–ஆவது கூட்டம் 28.12.2023 ஆம் நாள் அகரமுதலி இயக்ககத்தில், இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்ட இக்கூட்டத்தில் 220தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பட்ட கலைச்சொற்களுள் சில:

| | | |
|---|---|---|
| Crabbed character | – | தீயன் |
| Default judgment | – | எதிர்வழக்காடிலாத் தீர்ப்பு |
| Digital dial tone | – | எண்ம அழைப்பொலி |
| Discourse skill | – | கருத்தாடல் திறன் |
| Facebooker | – | முகநூலர் |
| Floral arrangement | – | மலர் ஒப்பனை |
| genomic data | – | மரபணுமூலகத் தரவு |
| Modular computing | – | தகவேற்றக் கணினிச் செயல்பாடு |

# அகரமுதலி இயக்ககத்தில் அகப்பயிற்சி!
# சென்னை, இலயோலா கல்லூரித் தமிழ்த்துறை மாணவர்கள் பயன்!




செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), சென்னை, இலயோலா கல்லூரித் தமிழ்த்துறை மாணவர்களுக்கான அகப்பயிற்சி 18.12.2023 ஆம் நாள் தொடங்கியது. ஒரு மாதகாலம் இம்மாணவர்களுக்குப் பயிற்சியளிக்கப்படவுள்ளது. சொற்குவை வலைத்தளத்தின் பயன்பாடு, கலைச்சொல்லாக்கத்தின் தேவை, மொழிக்காப்பில் அகராதிகளின் பங்கு, பிறமொழிக் கலப்பின்றித் தமிழ் பேசுதல் உள்ளிட்டவை குறித்த விழிப்புணர்வை இளைய தலைமுறையினரிடம் விதைக்கும் வகையில், அகரமுதலி இயக்ககத்தில் திங்கள்தோறும் கல்லூரி மாணவர்களுக்கு அகப்பயிற்சி வழங்கப்பட்டுவருகிறது.

அந்தவகையில், 18.12.2023 முதல் சென்னை, இலயோலா கல்லூரித் கல்லூரித் தமிழ்த்துறையில் பயின்றுவரும் ஒன்பது மாணவர்களுக்குக் அகப்பயிற்சியளிக்கப்பட்டு வருகிறது. பயிற்சியைத் தொடங்கி வைத்த அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள், " இளைய தலைமுறை மாணவர்கள், தாய்மொழி நம் உணர்வின் உயிர்மூச்சு, இனத்தின் அடையாளம் என்பதை முதலில் உணரவேண்டும். தமிழ்த்துறை மாணவர்கள் மதிப்பெண்ணுக்காக மட்டுமல்லாது, தாய்த்தமிழ் நம் வாழ்வின் மதிப்பை உயர்த்தும் என்று உறுதிபட நம்பிப் படிக்க வேண்டும். மொழித்துறை மாணவர்களுக்கு இயல்பாகவே சொற்களைக் கையாளும் திறன் அதிகம் என்ற நிலையில், அகராதிகளைத் தொடர்ந்து பயன்படுத்தப் பழகிக்கொண்டால், அது அவர்களைச் சிறந்த படிப்பாளிகளாக, படைப்பாளர்களாக உருவாக்கும். காலத்திற்கேற்ற கலைச்சொற்களை உருவாக்குவதற்குத் தொல்தமிழ் இலக்கியங்களே முதல் துணையாகும். பாட்டும் தொகையுமான சங்க இலக்கியத்திலிருந்து இக்காலத்திற்கேற்ற பொருத்தமான பல தமிழ்க் கலைச்சொற்களை நாம் பெறமுடியும். சில சொற்களை இலக்கியங்களிலிருந்து அப்படியே முழுமையாகவும், சில சொற்களை முன்னொட்டு, பின்னொட்டு சேர்த்தும் புதிய கலைச்சொற்களை நாம் உருவாக்க முடியும். இவ்வாறு செய்வதன் மூலம் புதிய கலைச்சொற்கள் கிடைப்பதோடு, பழந்தமிழ்ச் சொற்களை மீளாக்கம் செய்யவும் முடியும். எனவே மாணவர்கள் கலைச்சொல்லாக்கத்தில் தங்களின் பங்களிப்பை நல்க வேண்டும். அதற்கு இத்தகைய பயிற்சி வகுப்புகள் பயன்படும்" என்று தெரிவித்தார்.

நிகழ்வில், திட்ட ஒருங்கிணைப்பாளர் திரு. வே. பிரபு, அகரமுதலி இயக்கக அலுவலர்கள் (ம) பணியாளர்கள் உள்பட பலர் கலந்துகொண்டனர். பயிற்சியில் கலந்துசொண்ட மாணவர்களுக்கு அகரமுதலி இயக்கக வெளியீட்டு நூல்கள் வழங்கப்பட்டன

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், ஆம்பூர் ஆண்டாள் கலை மற்றும் அறிவியல் கல்லூரி இணைந்து நடத்திய சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் –2024







தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககமும், ஆம்பூர் ஆண்டாள் கலை மற்றும் அறிவியல் கல்லூரியும் இணைந்து நடத்திய சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் –2024 நிகழ்வு 06.01.2024 ஆம் நாள் பிற்பகல் நடைபெற்றது. இந்நிகழ்வில் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர் தமிழ்த்திரு. து.சுமதி அவர்கள் வரவேற்புரை வழங்க, கல்லூரித் தலைவர் திரு. கோ.பசுபதி அவர்கள் தலைமை தாங்கினார். கல்லூரிச் செயலாளர் திரு. இரா.குமார் மற்றும் பொருளாளர் திரு. ந.இலட்சுமிகாந்தன் ஆகியோர் முன்னிலை வகித்தனர். கல்லூரி பொறுப்பு முதல்வர் தமிழ்த்திரு. இரா.மஞ்சுளா அவர்கள் வாழ்த்துரை வழங்க, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் சொற்குவை பற்றி திட்டச் செயலாக்க உரை ஆற்றினார். தாம்பரம் கிறித்தவக் கல்லூரி உதவிப் பேராசிரியர் முனைவர் சு.சதாசிவம் அவர்கள் சிறப்புரை வழங்க, அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திரு. வே.பிரபு அவர்கள் சொற்குவை பற்றி விளக்கவுரை நிகழ்த்த, வாணியம்பாடி தமிழ்ச் செம்மல் விருதாளர் முனைவர் சரவணன் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். இறுதியில் ஆம்பூர் ஆண்டாள் கல்லூரி உதவிப் பேராசிரியர் தமிழ்த்திரு. இரா.வித்யா அவர்கள் நன்றியுரை கூறினார். இந்நிகழ்வில் கல்லூரிப் பேராசிரியர்கள் மற்றும் மாணவிகள் பலர் கலந்து கொண்டனர். நிகழ்வில் அகரமுதலிப் பணியாளர்கள் திரு. கி.தமிழ்மணி, திரு.வெ. சுதாகர், திரு. ச.எசேக்கியல் உள்ளிட்டோர் உடனிருந்தனர்.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் (ம) வாணியம்பாடி மருதர் கேசரி ஜெயின் மகளிர் கல்லூரி இணைந்து நடத்திய

# சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் –2024





தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் திருப்பத்தூர் மாவட்டம்ம, வாணியம்பாடி, மருதர் கேசரி ஜெயின் மகளிர் கல்லூரி இணைந்து நடத்திய சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் –2024 நிகழ்வு 06.01.2024 ஆம் நாள் முற்பகல் நடைபெற்றது. இந்நிகழ்வில் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர் திருமதி கி.மாலதி அவர்கள் வரவேற்புரை வழங்க, கல்லூரிச் செயலாளர் ஸ்ரீசி.லிக்மிசந்த் ஜெயின் அவர்கள் தலைமை தாங்க, கல்லூரி முதல்வர் முனைவர் ம. இன்பவள்ளி, மற்றும் முனைவர் பா.சிவராஜ் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினார்கள். அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் சொற்குவை பற்றி திட்டச் செயலாக்க உரை ஆற்றினார். தாம்பரம் கிறித்தவக் கல்லூரி உதவிப் பேராசிரியர் முனைவர் சு.சதாசிவம் அவர்கள் சிறப்புரையும், இயக்ககத் தொகுப்பாளர் திரு. வே.பிரபு அவர்கள் சொற்குவை பற்றி விளக்கவுரையும் நிகழ்த்தினார்கள். வாணியம்பாடி தமிழ்ச் செம்மல் விருதாளர் முனைவர் சரவணன் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். இவ்விழாவில் 2023–ஆம் ஆண்டிற்கான தூய தமிழ்ப் பற்றாளர் பரிசு பெற்ற செல்வி. ஆனந்த ஷைனி அவர்களுக்குச் சான்றிதழ் மற்றும் பொன்னாடை அணிவித்துச் சிறப்பிக்கப்பட்டது. நிறைவாக, மருதர் கேசரி ஜெயின் மகளிர் கல்லூரியின் உதவிப் பேராசிரியர் திருமதி.சு.பூங்கோதை அவர்கள் நன்றியுரை கூறினார். கல்லூரிப் பேராசிரியர்கள், மாணவிகள் உள்பட பலர் பங்கேற்ற இந்நிகழ்வில், அகரமுதலிப் பணியாளர்கள் திரு. கி.தமிழ்மணி, திரு.வெ. சுதாகர், திரு. ச.எசேக்கியல் உள்ளிட்டோர் உடனிருந்தனர்.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் காஞ்சிபுரம், காஞ்சி ஸ்ரீ கிருஷ்ணா கலை (ம) அறிவியல் கல்லூரி இணைந்து நடத்திய

# சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் –2024

















தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் காஞ்சி ஸ்ரீ கிருஷ்ணா கலை (ம) அறிவியல் கல்லூரி காஞ்சிபுரம், இணைந்து நடத்திய சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் –2024 நிகழ்வு 10.01.2024 ஆம் நாள் முற்பகல் நடைபெற்றது. இந்நிகழ்வில் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர் முனைவர் வ.வீரராகவன் அவர்கள் வரவேற்புரை வழங்க, கல்லூரி முதல்வர் முனைவர் கு.வெங்கடேசன் அவர்கள் தலைமை தாங்க, சென்னை அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் சொற்குவை பற்றி திட்ட செயலாக்க உரை ஆற்றினார். தாம்பரம் கிறித்துவக் கல்லூரி உதவிப் பேராசிரியர் முனைவர் சு.சதாசிவம் அவர்கள் சிறப்புரை வழங்க , இயக்ககத் தொகுப்பாளர் திரு. வே.பிரபு அவர்கள் சொற்குவை பற்றி விளக்கவுரை நிகழ்த்தினார். நிறைவாக, காஞ்சி ஸ்ரீ கிருஷ்ணா கலை (ம) அறிவியல் கல்லூரியின் உதவிப் பேராசிரியர் திருமதி.மோ.கார்த்திகா அவர்கள் நன்றியுரை கூறினார். இந்நிகழ்வில் கல்லூரிப் பேராசிரியர்கள், மாணவர்கள் பலர் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்** மற்றும்
**வெள்ளாத்தூர் சி.மா. அண்ணாமலை கல்விக் குழுமம்** இணைந்து நடத்திய

# சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் –2024






தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், திருவள்ளூர் மாவட்டம், வெள்ளாத்தூர் சி.மா. அண்ணாமலை கல்விக் குழுமம் (பலதொழில்நுட்பக் கல்லூரி, கல்வியியல் கல்லூரி, கலை மற்றும் அறிவியல் கல்லூரி) இணைந்து நடத்திய "சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் – 2024 நிகழ்வு 10.01.2024 ஆம் நாள் பிற்பகலில் சிறப்பாக நடைபெற்றது.

கல்லூரிக் கருத்தரங்க அறையில் நடைபெற்ற நிகழ்வில், கல்வியியல் கல்லூரியின் பொறுப்பு முதல்வர் திரு. து.பாபு அவர்கள் வரவேற்புரை வழங்க, தாளாளர் திரு. அ. அசோகன், துணைத் தாளாளர் திரு. அ. தமிழரசன், கல்லூரி இயக்குநர் திருமதி அ. தமிழ்ச்செல்வி, இணை இயக்குநர் திருமதி ஹர்ஷிதா ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

கலை மற்றும் அறிவியல் கல்லூரி முதல்வர் முனைவர் தி. செந்தில் இராஜேஸ்வரி, பலதொழில்நுட்பக் கல்லூரி முதல்வர் திரு. ந. பிரபு ஆகியோர் தலைமையுரையாற்ற, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் சொற்குவை பற்றி திட்டச் செயலாக்க உரையும், தொகுப்பாளர் திரு. வே.பிரபு அவர்கள் சொற்குவை பற்றி விளக்கவுரையும் ஆற்றினார்கள். கல்லூரிப் பேராசிரியர்கள் மற்றும் மாணவர்கள் பலர் கலந்து கொண்ட நிகழ்வின் நிறைவில் கல்வியியல் கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் திரு. மொ.மு. ஜெயராஜ் அவர்கள் நன்றியுரை கூறினார்.

# செய்தி நறுக்குகள்

இந்தியாவில் அதிக படங்களுடன் வெளிவரும் ஒரே மாலை நாளிதழ்

India's No.1 English Evening Daily
An Inspiring National Daily That Touches Your Heart
EVENING TAMIL NADU

மாலை தமிழகம்

Maalai Tamizhagam — Evening Tamil Daily
www.maalaitamizhagam.com — e-mail: maalaitamizhagam@gmail.com

சென்னை Chennai 20-12-2023 | புதன்கிழமை (மார்கழி 4) | வெளியூர் Out Station 21-12-2023 | Volume - 14 Issue -269 | பக்கம் Pages 8 | விலை Price ₹.3

## மாணவர்கள் மதிப்பெண்ணுக்காக மட்டுமல்லாது தாய்த்தமிழ் நம் வாழ்வின் மதிப்பை உயர்த்தும் என உறுதியாக நம்பி படிக்கணும்: கோ.விசயராகவன்!

**கல்பாக்கம், டிச. 20-**

தமிழ்நாட்டு அரசு தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் அகப் பயிற்சித் திட்டத்தின்கீழ், கல்லூரித் தமிழ்த்துறை மாணவர்களுக்கான அகப் பயிற்சி திங்கள் தோறும் நடத்தப்பட்டு வருகிறது. இந்த பயிற்சியில் சொற்குவை வலைத்தளத்தின் பயன்பாடு, கலைச்சொல்லாக்கத்தின் தேவை, மொழிக்காப்பில் அகராதிகளின் பங்கு, பிறமொழிக் கலப்பின்றித் தமிழ் பேசுதல் போன்ற விழிப்புணர்வை இளைய தலைமுறையினரிடம் ஏற்படுத்தும் வகையில் நடத்தப் பட்டு வருகிறது.




அந்தவகையில், கடந்த 18ம் தேதி முதல், சென்னை லயோலா கல்லூரி மாணவர்கள் ஒன்பது பேருக்கு இந்த பயிற்சியை அகரமுதலி இயக்குனர் கோ.விசயராகவன் துவக்கி வைத்து உரையாற்றினார். அவர் பேசும் போது, ''தாய்மொழி நம் உணர்வின் உயிர்மூச்சு, இனத்தின் அடையாளம் என்பதை முதலில் உணரவேண்டும். மாணவர்கள் மதிப்பெண்ணுக்காக மட்டுமல்லாது, தாய்த்தமிழ் நம் வாழ்வின் மதிப்பை உயர்த்தும் என்று உறுதிபட நம்பிப் படிக்க வேண்டும். மொழித்துறை மாணவர்களுக்கு இயல்பாகவே சொற்களைக் கையாளும் திறன் அதிகம் என்ற நிலையில், அகராதிகளைத் தொடர்ந்து பயன்படுத்தப் பழகிக்கொண்டால், அது அவர்களைச் சிறந்த படிப்பாளிகளாக, படைப்பாளர்களாக உருவாக்கும்.

காலத்திற்கேற்ற கலைச்சொற்களை உருவாக்குவதற்குத் தொல்தமிழ் இலக்கியங்களே முதல் துணையாகும். பாட்டும் தொகையுமான சங்க இலக்கியத்திலிருந்து இக்காலத்திற்கேற்ற பொருத்தமான பல தமிழ்க் கலைச்சொற்களை நாம் பெறமுடியும். சில சொற்களை இலக்கியங்களிலிருந்து அப்படியே முழுமையாகவும், சில சொற்களைமுன்னொட்டு, பின்னொட்டு சேர்த்தும் புதிய கலைச்சொற்களை நாம் உருவாக்க முடியும். இவ்வாறு செய்வதன் மூலம் புதிய கலைச் சொற்கள் கிடைப்பதோடு, பழந்தமிழ்ச் சொற்களை மீளாக்கம் செய்யவும் முடியும். எனவே மாணவர்கள் கலைச்சொல்லாக்கத்தில் தங்களின் பங்களிப்பை நல்க வேண்டும். அதற்கு இத்தகைய பயிற்சி வகுப்புகள்மிகவும்பயன்படும்,'' என்றார்.

திட்ட ஒருங்கிணைப்பாளர் வே. பிரபு, அகரமுதலி இயக்கக அலுவலர்கள் (ம) பணியாளர்கள் உட்பட பலர் கலந்து கொண்ட இந்த நிகழ்ச்சியில் மாணவர்களுக்கு அகரமுதலி இயக்ககத்தின் வெளியீட்டு நூல்கள் வழங்கப்பட்டன.

தினமலர்

## மாணவ துாதுவர் பயிற்சி திட்டம் கல்லுாரியில் விளக்க நிகழ்ச்சி

**கீழம்பி, ஜன. 11-**

தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலி திட்ட இயக்ககம் மற்றும் காஞ்சி கிருஷ்ணா கலை மற்றும் அறிவியல் கல்லுாரி சார்பில், 'சொற்குவை' மாணவ துாதுவர் பயிற்சி திட்டம், செயல் முறை விளக்க நிகழ்ச்சி கல்லுாரியில் நேற்று நடந்தது.

கல்லுாரி தமிழ்த் துறை தலைவர் முனைவர் வீரராகவன் வரவேற்றார். கல்லுாரி முதல்வர் முனைவர் வெங்கடேசன் தலைமை வகித்தார். கல்லுாரி நிர்வாக இயக்குனர் வீரராகவன் மற்றும் சென்னை கிறிஸ்துவ கல்லுாரி பேராசிரியர் முனைவர் சதாசிவம் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல், அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குனர் முனைவர் கோ.விசயராகவன், திட்ட செயலாக்க உரையாற்றினார்.

மாணவர்களுக்கு சொற்குவை துாதுவர் எனும் சான்றிதழும், பரிசும் வழங்கி, செந்தமிழ் தமிழ் காப்போம், செந்தமிழில் பேசுவோம் எனும் கருத்தினை வலியுறுத்தி எங்கும் தமிழ், எதிலும் தமிழ், நம்மொழி தாய்மொழி தமிழ்மொழி காப்போம் என, எடுத்துரைத்தார்.

இந்தியாவில் அதிக படங்களுடன் வெளிவரும் ஒரே மாலை நாளிதழ்

# மாலை தமிழகம்

Maalai Tamizhagam
Evening Tamil Daily
www.maalaitamizhagam.com
e-mail: maalaitamizhagam@gmail.com

சென்னை Chennai 29-12-2023 | வெள்ளிக் கிழமை (மார்கழி 13) | வெளியூர் Out Station 30-12-2023 | Volume - 14 Issue -278 | பக்கம் Pages 6 | விலை Price ₹.3



# தமிழ்க்கலைக் கழக 148வது கூட்டம்

# 220 கலைச்சொற்களுக்கு வல்லுனர் குழு ஏற்பு

**கல்பாக்கம், டிச. 29-**

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையானதமிழ்க்கலைச் சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்கு கொண்டு வரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக்கழகம்' செயற்பட்டுவருகிறது.




மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப்பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் அந்த சொற்கள்சீராக்கம்செய்யப்பட்டு இயக்ககத்தின் சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டு வருகின்றன.

அந்த வகையில் இயக்ககத்தின் தமிழ்க் கலைக் கழக 148வது கூட்டம், நேற்று (28ம் தேதி), இயக்குனர் முனைவர் கோ.விசயராகவன் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, அ.மதிவாணன் மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்து கொண்டனர். கூட்டத்தில் 220 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுனர் குழு ஏற்பளித்தது.





தேசம் போற்றுவோம்

# தின செயல்

DHINA CHEYAL Tamil Daily

தேசிய தமிழ் நாளிதழ்





| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| Volume : 6 | Issue : 70 | 9.1.2024 | TUESDAY | pages: 4 | Annual Subsription: Rs.1825/ | Price: Rs. 5/ |
| மலர் : 6 | இதழ் : 70 | 9.1.2024 | செவ்வாய்க்கிழமை | பக்கம்: 4 | ஆண்டு சந்தா : ரூ.1825/ | விலை: ரூ. 5/ |


## திருப்பத்தூர் மாவட்டம் வாணியம்பாடி மருதர் கேசரி ஜெயின் மகளிர் கல்லூரியில்

# தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி துறை சார்பாக "சொற்குவை மாணவ தூதுவர் பயிற்சித் திட்ட" நிகழ்வு

திருப்பத்தூர், ஜன.9:

திருப்பத்தூர் மாவட்டம் வாணியம்பாடி மருதர் கேசரி ஜெயின் மகளிர் கல்லூரியில் 06.01. 2024 சனிக்கிழமை அன்று காலை 10.00 மணியளவில் தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி துறை சார்பாக "சொற்குவை மாணவ தூதுவர் பயிற்சித் திட்ட" நிகழ்வு நடைபெற்றது.

தமிழ்த்தாய் வாழ்த்துடன் துவங்கிய இந் நிகழ்விற்கு கல்லூரித் தலைவர்.எம். விமல்சந்த் ஜெயின், கல்லூரிச் செயலாளர்.சி. லிக்மி சந்த் ஜெயின் ஆகியோர் முன்னிலை வகிக்க, அகர முதலி திட்ட இயக்ககத்தின் இயக்குநர் முனைவர். கோ.விசயராகவன், சென்னை கிறித்துவக் கல்லூரி பேராசிரியர் முனைவர்.சு. சதாசிவம், வாணியம்பாடி மூலிகை மருத்துவர் அக்பர் கவுசர், கல்லூரி முதல்வர் முனைவர்.எம். இன்பவள்ளி, கல்வி ஆலோசகர் முனைவர்.



பாலசுப்பிரமணியன், மக்கள் தகவல் தொடர்பு அலுவலர்.பி. சக்திமாலா, முனைவர்.சி.நித்யா, வணியம்பாடி இசுலாமிய கலை அறிவியல் கல்லூரி தமிழ்த்துறை தலைவர் முனைவர்.ப. சிவராஜி, இமயம் கலைஅறிவியல் கல்லூரி பேராசிரியர் சரவணன், ஜோலார்பேட்டை படித்துறை புத்தக அறக்கட்டளை நிறுவனர் இளம்பருதி ஆகியோர் தலைமை தாங்கினர்.

இத்திட்ட நிகழ்ச்சியில் செந்தமிழ் "சொற்பிறப்பியல் அகர முதலித்திட்ட இயக்ககத்தின்" இயக்குநர் முனைவர் கோ . விசயராகவன், திட்ட தொகுப்பாளர். வே.பிரபு மற்றும் தமிழ்மணி ஆகியோர் சொற்குவையின் பயன்பாட்டையும், தமிழ் மொழியின் சிறப்பினையும் முக்கியத்துவத்தையும் மாணவர்கள் பயன்பெறும் வகையிலும் ஊக்கத்தை உருவாக்கும் வகை யிலும் எடுத்துரைத்தனர். இதில் 150 க்கும் மேற்பட்ட மாணவிகள் பங்கு கொண்டு பயனடைந்தனர்.இந்நிகழ்ச்சிக்கு தமிழ்த்துறைத் தலைவர் பேரா. கி.மாலதி வரவேற்புரை வழங்க , முதுகலைத் தமிழாய்வுத்துறை ஒருங்கிணைப்பாளர் முனைவர்.பி. பாலசுப்ரமணியன். அறிமுக உரையை ஆற்றினார்.இந்நிகழ்ச்சியை பேரா.வி.ஜெயப்பிரியா , தொகுத்து வழங்க , பேரா எஸ்.பூங்கோதை நன்றியுரை ஆற்றி நாட்டுப் பண்ணுடன் இனிதே நிறைவடைந்தது.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

"தேமதுர தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்"

– உலக மாபாவலர் பாரதியார்

தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. இப்பயிலரங்கத்தின் 112–114 அமர்வுகள் 2023 திசம்பர் 22, 29, 2024 சனவரி 05 ஆகிய நாள்களில் நடைபெற்றன.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களிடமிருந்தும் பல்வேறு துறைசார்ந்த கலைச்சொற்களைப் பெற்று, ஆய்ந்து சொற்குவையில் சேர்த்து, தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர்

இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 22.12.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**பேரா. முனைவர் க. கலைமதி**
நுண்ணுயிரியல் (ம)
தொற்றுநோய்த் துறை,
ஃப்ளோரிடா பன்னாட்டுப்
பல்கலைக்கழகம்,
மயாமி, அமெரிக்கா



**முனைவர் மெய். சித்ரா**
தலைவர்,
தமிழ்ப் பண்பாட்டு இயக்கம்,
ஆங்காங்



**முனைவர் ப. கமலரூபன்**
ஆராய்ச்சியாளர், இங்கிலாந்து



**பேரா. முனைவர் மாதரி மாணிக்கம்**
முன்னை புல முதன்மையர்
வணிகவியல் துறை, கோயம்புத்தூர்

## 29.12.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**பொறிஞர் அகணி சுரேஸ்**
எழுத்தாளர், கனடா



**திருமதி கிருஷ்ணலதா வசீகரன்**
கலை பண்பாட்டுச் சமூகச்
செயற்பாட்டாளர்
கலை பண்பாட்டுச் சமூக
அலுவலகம்
ஜெனீவா, சுவிட்சர்லாந்து



**பொறிஞர்**
**உலோ. செந்தமிழ்க் கோதை**
அறிவியல் எழுத்தாளர்,
சென்னை

## 05.01.2024ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**திரு. ப. தியான்**
தமிழாசிரியர், செருமனி



**பேரா. முனைவர் சு. சந்திரசேகரன்**
புலநெறிப் பேராசிரியர்,
தகவல்நுட்பத் துறை,
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர்



**திரு. அகநம்பி (எ)**
**தி. பாலசுப்பிரமணியன்**
எழுத்தாளர்,
வெளியீட்டாளர்
சென்னை

# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில...

**பேரா. முனைவர் க. கலைமதி**

| | | |
|---|---|---|
| First line drugs | _ | முதல்சுற்று மருந்துகள் |
| Communicable diseases | _ | பரவுநோய்கள் |
| Communicable infections | _ | பரவுப்பிணிகள் |

**முனைவர் ப. கமலரூபன்**

| | | |
|---|---|---|
| Dimensionality Reduction | _ | பரிமாணச் சுருக்கம் |
| Ensemble Learning | _ | குழுமக் கற்றல் |
| Time Series Analysis | _ | நேரத்தொடர்ப் பகுப்பாய்வு |

**முனைவர் மெய். சித்ரா**

| | | |
|---|---|---|
| Language Detection | _ | மொழித் துப்பறிதல் |
| Intent Detection | _ | உள்நோக்கம் துப்பறிதல் |
| Keyword Extractor | _ | குறிப்புச்சொல் பிரித்தெடுப்பி |

**பேரா. முனைவர் மாதரி மாணிக்கம்**

| | | |
|---|---|---|
| Delcredere commission | _ | கடன் பொறுப்புத் தரகு |
| Defensive stock | _ | தன் நிலை காப்புப் பங்கு |
| Proliferation | _ | பெருக்கம் |

**பொறிஞர் அகணி சுரேஸ்**

| | | |
|---|---|---|
| Litter bin | _ | குப்பைத் தொட்டி |
| Kisoks | _ | மின்னியற் தரவல் பலகை |
| Speed bump | _ | வேகத்தடை |

**திருமதி கிருஷ்ணலதா வசீகரன்**

| | | |
|---|---|---|
| Full Canton | _ | முழு மாநிலம் |
| Money Political | _ | பண அரசியல் |
| Durabilision | _ | நீண்டவாழ்வு |

**பொறிஞர் உலோ. செந்தமிழ்க் கோதை**

| | | |
|---|---|---|
| Synchronus orbit | _ | ஒத்தியங்கு வட்டணை |
| Transfer orbit | _ | பெயர்வு வட்டணை |
| Repeat orbit | _ | மீள்வு வட்டணை |

**திரு. ப. தியான்**

| | | |
|---|---|---|
| Stage set | _ | அரங்கழகூட்டல் |
| Scenery | _ | கதைக்காண் திறம் |
| Comedy | _ | களித்தியல் / களிப்பியல் |

**பேரா. முனைவர் சு. சந்திரசேகரன்**

| | | |
|---|---|---|
| Data Storytelling | _ | தரவு கதைத்தல் |
| True Positive | _ | மெய் நேர் |
| Dashboard | _ | முகப்புப் பேராயம் |

**திரு. அகநம்பி (எ) தி. பாலசுப்பிரமணியன்**

| | | |
|---|---|---|
| Bipolar mood disorder | _ | இருமை மனக் கோளாறு |
| Night Terror | _ | நடைத் தூக்கம் |
| Hypersomnia | _ | உறக்க விருப்பப் பிணி |

## மயங்கொலிச் சொற்கள்

**உண்ணுதல்**

1. சாப்பிடல் "உறியுண்ட கரகத்தோடு" (திருவிளை. யானை.38)
2. துய்த்தல் "மங்கைய ரிளநலமைந்த ருண்ண" (கம்ப. உண்டா.63)
3. உட்கொள்ளுதல்
4.பொருந்துதல் "நதியுண்ட கடல்" (தாயு. மலைவளர்.1)
5. ஒத்தல் " சேலுண் கண்ணியர்" (சீவக. 2383)
6. கவர்தல் "அவனா ருயிரை யுண்ட கூற்றினை" (திவ். திருக்குறுந்.63)
7. இசைவாதல்

**உன்னுதல்**

1. கருதுதல்
2. எழும்புதல்
3. முன்னங்கால் விரலையூன்றி நிமிர்தல்
4. இழுத்தல்
5. ஊஞ்சலுந்துதல்

"குதிரை உன்னிப் பாய்ந்தது" என்பது உலக வழக்கு.